உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# வேதாந்தம்

வேதமானது ஈஸ்வரன் உலகத்தைச் சிருஷ்டிக்கச் சங்கற்பித்த பிரதி சிருஷ்டியிலும் முதலி லுண்டாக்கப்பட்ட புருஷனுக்கு உபதே சிக்கப்பட்டது. அவ்வாதி புருஷன் தனக்குப் பிந்திச் சிருஷ்டியான வர்களுக்கு உபதேசக்கிரமத்தில் இது வழங்கிவருவதாயிற்று. இவ் வேதம் அநாதியாகிய ஈஸ்வரனால் வெளிப்பட்டமையின் அது அநாதி யெனவும் கூறுவதாயிற்று. இவ்வேதம் இன்ன காலத்தில் முதலில் வெளிப்படுத்தப்பட்டதெனத் தெரியாமையால், அநாதியெனினுமொக்கும். ஒரு அரசன் தன்தேசத்துக்குட்பட்ட மனிதர்களை யாளும் விஷயத்தில் தமது ஆஞ்ஞையை அறிந்துகொள்ளும் பொருட்டு அவனால் ஏற்படுத்தும் சட்டம்போல, சகல உலகங்கட்கும் அரசனாகிய ஈஸ்வரன் தன்னால் ஆளப்படும் சர்வமனிதர்களும் தமது ஆஞ்ஞையை யறிந்து நடந்து கொள்ள அவராலேற்படுத்திய சட்டமாம். இவ்வேதம் இவ்வளவென அளவிடுதற் கரிதாய் விஸ்தாரமாக விருந்தது. அது காலக்கிரமத்தில் லேதாத்தியனம் குறைவுபட்டுப் போயிற்று, வியாச முனிவர் தமது காலத்தில் எவ்வளவு வழங்கியதோ அவற்றை அம் முனிவர் இருக்கு எஜுஸ் ஸாமம் அதர்வண மென்பதாகப் பிரித்துத் தமது சீடர்களுக்குபதேசித்தனர். இவ்வேதங்களில் அனேக சாகைகளுண்டு. ஒவ்வொரு சாகையில் முந்தியபாகம் யக்ஞயாகாதி நித்தியநைமித்திக கருமங்களையும், அவைகளை யனுஷ்டிக்க வேண்டிய விதங்களையும், செய்யத் தக்க அதிகாரிகளையும், செய்விக்கிறவர்களின் யோக்கியதையும், ஆராதிக்க வேண்டிய தேவதைகளையும், அத்தேவதைகளைப் பற்றிய மந்திரங்களையும், அந்தந்தக் கருமங்களின் பயன்களையும், பின் அக்கரும் சம்பந்தமான பலவிஷயங்களையும் சொல்லுகிறது. அதனால் இது பூர்வகாண்டம் அல்லது கன்மகாண்டமெனப் பெயர்பெறும். பிந்தியபாகமானது ஈஸ்வரனை யுபாசிக்கும் மார்க்கமாகிய சாங்கியயோகம், நிஷ்காம கருமயோகம், தபசு, சகுண நிர்க்குணப் பிரம்மோபாசனாவிதி, ஆத்மலட்சணம், கரும்சந்நியாசம், பக்தி, வைராக்கியம் முதலியவற்றைப் போதிக்கின்றமையின், இப்பாகம் உத்தரகாண்டம் அல்லது ஞானகாண்டமெனப் பெயர்பெறும். இதுவே வேதாந்தம், வேதத்தின் முடிவு.

இவ்வேதாந்தத்தில் ஆன்மாக்களினுடைய கன்மானு சாரமாக அவரவர்கள் புத்தி யுக்தி சக்தி குணம் மனவுறுதி காலம் தேசம் முதலியவைகட்குத் தக்கதாக எவ்வெவர்க்கு எஃதெதில் பக்தி விசுவாசம் நம்பிக்கை பற்றுத லுண்டாகிறதோ அந்தந்த வகையைப் பின்பற்றி அவரவர்கள் மனத்திற்குத் தக்கபடி யொவ்வொரு பலப் பிராப்தியை யடையும்படி பற்பல தேவதாந்தரங்களை கூறியிருக்கினும், பரிபக்குவ மடைந்த உத்தமர்கள் வழிபட்டு ஞானமடைவதற் கேதுவாகிய பரமேஸ்வரனொன்றே யென வச்சிரலேபமாகத் தாபிக் கப்பட்டிருக்கிறது.

அவ்வுண்மை அவ்வேதாந்தத்தின் உபக்கிரம உபசம்ஹார அப்பியாச வாக்கியங்களால் அறிந்து கொள்ளவேண்டும்.

அதுவருமாறு: - வேதாந்த மென்பது நூற்றெட்டு (108) உபநிஷத்துக்களாம். நூற்றெட்டேயென ஸ்ரீ இராமச்சந்திரர் கபிகுல சிரேஷ்டராகிய அனுமாருக்குச் சொன்ன யஜுர் வேத முத்திகோப நிஷத்தும், மகாவாக்கிய இரத்தினாவளியும் நிஷ்கரிஷை செய்துவிட்டன. உபநிஷத்து நூற்றெட்டினுள் முதலிலுள்ள ஈசாவாஸ்ய மென்னும் உ.பக்கிரமோப நிஷத்து "ஈசாவாஸ்யமிதம்ஸர்வம்' என்று சிவபெருமானுக்குரிய **"ஈச"** சப்தத்தில் உபக்கிரமஞ் செய்யப்பட்டிருக்கிறது. "சம்புரீச : பசுபதி:" எனும் அமரஸிம்ஹத்தால்,“ ஈச'சப்தம் சிவ பெருமானுக்கே ரூடி நாமமாம். அன்றியும். “ஈசாவாஸ்யாதி மந்த் ராநயோ ஜபேத் நித்யம் மமாக்ரதா, மத்பாயுஜ்யமவாப் நோதிமம லோகேமஹீயதே" (ஈசா வாஸ்யம் முதலிய மந்திரங்களை எவனெனக் கெதிரிலிருந்து தினந்தோறும் ஜபிக்கின்றானோ, அவனென துலகில் பெருமை பெறுவதுந்தவிர எனது சாயுஜ்யத்தை யடைகிறான்) எனச் சிவபெருமான் இராமருக்குப் போதித்ததாகச் சீவகீதை பதினைந்தாவது அத்தியாயத்திற் காணப்படுகிறது. “ஈச" சப்தம் சங்கரார்ச்சாரியர் கூறும் ஆன்மாவுக்கேனும், இராமாநுஜரும் மத்துவரும் கூறும் நாராயணருக்கேனும் செல்லாது. உபநிஷத்துக்களில் பரமான்மாவை ஆன் மாவெனக் கூறலின், சங்கராச்சாரியர் “ஈச" சப்தத்திற்கு ஆன்மாவென்றது பொருந்து மெனின், அது பொருந்தாது. எங்ஙன மெனின்? "ஆத்மந்யே வாத்மாகம் பர்யத்” (ஆன்மாவிலே ஆன்மாவை க்காண்க) எனச் சாந்தோக்யோப நிஷத்தும் மற்றும்பல உபநிஷத்துக்களும் உபயான்மாவைக் குறிக்கின்றன. ஈண்டு ஆன்மாவிலே யென்றது ஜீவான்மாவை, ஆன்மாவை யென்றது பரமான்வை. உபநிஷதங்களில் பரமான்மாவை ஒவ்வோரிடங்களில் ஆன்மாவென்றது அங்காங்கிலட்சணை, இங்ஙனமாக, சங்கராசாரியருக்கு உபயான்மா உடன்பாடன்று, அவர் மதம் ஏகான்மவாதம், இவர் குறிக்கும் ஆன்மா இவர் கொள்கையின்படி இருபத்து நான்குதத்துவங்களைக் கடந்தது. பரமான்மா முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்து அங்காங்கி லட்சனையாற் கூறப்படும் ஆன்மாவாதலெங்ஙனம்? அன்றியும், "வாசுதேவோ பாராப்ரகிருதி", "ஜகத்விஷ்ணு" ப்ரகிருதி பரமோ விஷ்ணு”, ‘யோநிஜநார்தநா” "விஸ்வம் நாராயண" என்ற சுருதிகளின் படி நாராயணர் பிரகிருதி தத்துவத் தலைவராகலினானும், “ப்ரம்ம விஷ்ணுருத்ரேந்த்ராஸ் தேஸம் ப்ரஸுயந்தே ஸர்வாணி சேந்திரியாணீ ஸஹபூதைர் நாகாரணனாம்த்யர் தாகா ரணந்து த்யேயஸ் ஸர்வைச்வர்ய ஸம்பங்கஸ் ஸர்வேச்வரச் சம்புராகாசமத்யே" (பிரமன் விண்டுருத்தி ரன் இந்திரனாகிய இவரெல்லாம் படைக்கப்படுகின்றனர். இந்திரியங்க ளெல்லாம் பூதங்களோடு படைக்கப்படுகின்றன. ஆகலின் அவர்களும் அவைகளும் காரணமில்லை. தியாதாவாகிய அவர்களாலே தியானிக்கப் படும் தியேயனெனும் சருவைச்சுவரிய சம்பன்னனும் சருவேச்வர னும் சம்புசத்தவாச்சியனும் பரமாகாச மத்தியத்திலிருப்பவனுமான சிவனே காரணன்) என அதர்வசிகோபநிஷத்து அறைதலினாலும் "ஈச” சப்தத்திற்கு நாராயணரைக் குறிப்பதற்குமிடமில்லை, பாஞ்சராத்திரிகள் தங்கள் மூர்த்தியையும் ஈசுவானெனச் சொல்லிக்கொள்ளுகிறார்களேயெனின், அவர்கள் தங்கள் கோயிலை ஈஸ்வரன்

கோயிலென அழைக்கக் கூசுவதென்னை? தாங்கள் ஈசுவர ஐயங்கார் எனப் பெயர்வைத் தழைத்துக் கொள்ளச் சம்மதியாத தென்னை? எனக்கடாவி மறுக்க. ஆகவே உபநிஷத்துக்களின் உபக்கிரமம் சிவபரமாகவே முடிந்தது,

இனி, முக்திகோபநிஷத்தென்னும் உபசம்ஹாரோப நிஷத்து "சதுர்விதா சயாமுக்திர் மதுபாஸயோ பவேத்" என்றும், "கைவல்ய முக்திரேகைவ பாரமார்த்திக ரூபிணீ" என்றும், "அதஸ்ஸர்வேஷாம் கைவல்ய முக்திர்ஜ்ஞாநமார்க்கேண' என்றுங்கூறி, இறுதியத்தியாயத்தில் "ஊர்த்வபூர்ணமத : பூர்ணம் மத்யபூர்ணம் சிவாத்மகம்" என்பதனாலும், அந்த கைவல்ய முக்தி சிவோபாஸகரடையுஞ் சாயுச்கிய மென்று கைவல்லியோப நிஷத்து முதலியவற்றில் பெறப்படுதலானும் உபநிஷத்துக்களின் உபசம்ஹாரம் சிவபரமாகவே முடிந்தது.

இனி, அப்பியாசமாவது இடையே நிகழும் வாக்கியம். இதே வாக்கியம் மற்றும் பல இடங்களிலெடுத்தாளப் படவேண்டும். அங்ஙனம் ஆளப்பட்டிருந்தால் தான் அப்பியாசம் நிலைபெறும். அது வருமாறு: - **கைவல்ய முக்தியானது எந்த உபாயத்தினால் கிடைக்கிற தென்றாலோ முமூட்சுகளுக்கு முத்தியின் பொருட்டு மாண்டூக் கியோப நிஷத்து ஒன்றே போதும் எனவும், இம்மாண்டூக் யோப நிஷத்து நூற்றெட்டு உபநிஷத்தினுஞ் சிறந்ததெனவும் முத்திகோப நிஷத்தில் முடிவு செய்திருக்கிறது.** இத்தகைய பிரதான மாண்டூக் யோப நிஷத்தின் இருதயத்தில் "ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவமத் வைதம் சதுர்த்த மந்யந்தே" எனும் வாக்கியம் விளங்குகிறது. இதே வாக்கியத்தை நிருஸிஹ்மபூர்வதாபிரி, உத்தாதாபிரி, நார்தபரிவிராஜ கோபம், ராமோத்த தாபிரி முதலிய உபநிஷத்துக்களில் எடுத்தாளப்பட்டிருக்கின்றது. நான்காவது (துரிய) தெய்வத்தைவிளக்கு நிமித்தம் "சதுர்த்தம்" என்னும் வாக்கியத்தோடு வெளிப்படும் இவ்வசனங்க டோறுமிருக்கும் தெய்வம், **"சிவம்"** என்பதன்றி வேறு தெய்வப்பெயர்களிலொன்று மெடுத்தாளப்படவில்லை. இராமா நுஜர் ஈண்டுக் குறித்த " சிவம்" என்பதற்கு மங்கள சொரூபனெக்கூறி அப்பெயரை நாராய ணன்மே லேற்றியும் சதுர்த்த மென்பதற்குச் சங்கர்ஷண, பிரத்யும், அநிருத்தரெனு மூவர்க்கும் லயஸ்தானமான வாசுதேவனென்றும் பொருள் கொண்டனர். "அத்வைதம் சதுர்த்தம் பிரஹ்ம விஷ்ணுருத்ராதீ மேகமாசாஸ்யம் பகவந்தக்சிவம்" (அந்நான்காந் தெய்வம் பிரமன் விஷ்ணு உருத்திரனென்னும் மூவரின் மேன்பட்டசிவம்) எனப் பஸ்மஜாபாலவசனம் இனிது விளக்கினமையின், இராமாநுஜர் அர்த்தம் அனர்த்தமாம். அன்றியும், "நஜாயதேம்ரியயதே" (ஜீவனுக்கு உற்பத்தி நாசங்களில்லை) என்ற வேதவசனத்திற்கு முரணாக வாசுதேவனிடத்தி லிருந்து சங்கர்ஷணன் உண்டாயினானென்றும், அவர்ஜீவனென்றும், ப்ரத்யுமான் மனசென்றும், அநிருத்தன் அகங்காரனென்றும் பாஞ்ச ராத்திரம் கூறலின், இவர்களை மும்மூர்த்தி ஸ்தானத்தில் வைத்த இராமாநுஜர் கொள்கை அலமஞ்ஜஸமாம். ஆகவே உபநிஷத்துக்களின் அப்பியாச வாக்கியங்களும் சிவபரமாகவே முடிந்தது.

இவைமுதலிய பலிஷ்ட பிரமாணங்களால் உபநிஷத்துக்களின் உபக்கிரம, உபசம்ஹார அப்பியாச நியாயப்படி நூற்றெட்டு உபநிஷத்துக்களாகிய வேதாந்தத்தில்

உள்ள பொருள் சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவர்கள் கொண்டாடும் சிவபெருமானே யென்பது ஸர்வஸம்பிரதி பந்நமாம்.

மணவழகு.

சித்தாந்தம் - 1916 ஞு - ஏப்ரல் மீ